

உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

மலர் 13 ] பிப்ரவரி 1998 [ இதழ் 8

பெருமைதரு ஆசிரியர் : M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



''அண்ணல் ஆலவாய் நண்ணினான் தனை
எண்ணியே தொழத் திண்ணம் இன்பமே''






1998
பிப்ரவரி
மலர் 15
இதழ் 8

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

**நமது சிந்தனைக்கு :**

'இன்னஉரு இன்னநிறம் என்றறிவதேல் அரிது'

இன்னஉரு இன்னநிறம் என்றறிவ
தேல்அரிது நீதிபலவும்
தன்னஉரு வம்மென மிகுந்தவன்
நீதியொடு தானமர்விடம்
முன்னைவினை போய்வகையி னால்முழு
துணர்ந்து முயல்கின்ற முனிவர்
மன்னஇரு போதுமரு வித்தொழுது
சேரும்வயல் வைகாவிலே.

— திருஞான சம்பந்தர்

பெருமானது வடிவம் இன்ன வடிவம், அவனது நிறம் இன்ன நிறம் என்று ஆராய்ந்தறிவதாயின் அது முடியாது. நீதிகள் பலவும் தன்னுடைய வடிவமாகும் என்னும்படி மேம்பட்டவனான அப்பெருமான் முறைப்படி அமர்ந்துள்ள இடம், பழைய பாவங்கள் நீங்கப்பெற்று, பெருமானை அடையும் நெறியை முறைப்படி முற்றும் அறிந்த, அந்நெறியிலே முயலும் தவ முனிவர்கள் காலை மாலையாகிய இரண்டு வேளைகளிலும் மிகுதியாக வந்து சேர்ந்து பெருமானை வணங்கித் தியானித்தற்கு இடமானதும் வயல் சூழ்ந்ததுமான திருவைகாவூரே ஆகும்.



# குடமுழுக்கு ஏன்? ★

**(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்)**

'' புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையான் காணப் படும்''

[திருக்கோயில்களில் நடைபெறும் குடமுழுக்குப் பெருவிழா நிகழ்த்தப் பெறுவதற்குரிய காரணங் களையும் - அஷ்டபந்தனம் என்பது இன்னது என்பதனையும் — குடமுழுக்கு நிகழ்த்துவதால் வரும் பயனையும் இக்கட்டுரை அழகுற விளக்கி நிற்கிறது.]

**தெய்விக ஆற்றலைப்பெற :**

வீட்டில் திருமணம் முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறுங் காலங்களில் வீட்டைத் தூய்மைசெய்து பழுது பார்த்து வெள்ளை யடித்து வண்ணம்தீற்றி அலங்கரிப்போம். அதுபோலத் திருக் கோயில் மகாகும்பாபிஷேக காலங்களில் புனருத்தாரணம் செய்து கோயிலைப்பழுதுபார்த்துத் தூய்மைசெய்து அழகுறுத்து கிறோம். கோயிலுக்கு வெளியே யாகசாலை அமைத்து அலங் கரித்து அங்கே சுவாமியை எழுந்தருளச்செய்து கோயிலைத்தூய் மைசெய்கிறோம். 12—ஆண்டுகளுக்கு ஒருமுறை திருக்கோயில் களுக்கு மகாகும்பாபிஷேகங்கள் செய்விக்கவேண்டும். இயலாத கோயில்களில் அஷ்டபந்தனம் சாத்தியாவது மகாகும்பாபிஷேகம் செய்விக்கவேண்டும். திருவுருவங்கள் அஷ்டபந்தனம் இல்லாமல் கூடாது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மின்சார சாத னங்களை வீடுகளில் புதுப்பிக்கிறோம். பழுதடைந்த மின்கம்பி களை அகற்றிப் புதியனவற்றைப் பொருத்துகிறோம். ஒலி, ஒளி, காற்று முதலியவற்றைப் பெறுதல் முடியாது. அதுபோல அஷ் டபந்தனமில்லாத கோயில்களில் திருவுருவங்களில் தேங்கி நிற்கும் தெய்விக ஆற்றலை நாம் பெறுதல் இயலாது.

★ திருப்புறம்பயம் குடமுழுக்கு விழாவை ஒட்டி எழுந் தருளி அன்பர்களிடையே திருவாய்மலர்ந்தருளி 10-10-1972 ஞானசம்பந்தம் இதழில் வெளியிடப்பெற்ற ஆசியுரை.

**அஷ்டபந்தனம் விளக்கம் :**

அஷ்டபந்தனம் கொம்பரக்கு, கருங்குங்கிலியம், சுக்கான், காவிக்கல், வெண்மெழுகு, வெண்ணெய், செம்பஞ்சு, இலிங்கம் முதலிய எட்டுப்பொருள்களால் செய்யப்பெறுவது. சிமெண்டினால் மட்டும் பதிய வைப்பது ஏகபந்தனம் எனப்படும்.

கொம்பரக் கொருபங்கு திரிபங்க தேகருங்
 குங்கிலியம் மூன்றுசுக்கான்
கொண்டமுக் காற்பங்கு காவிக்கல் வெண்மெழுகு
 கூறுநவ நீதமூன்று
செம்பஞ்ச தத்தொகை யிலிங்கமே காற்பங்கு
 சேர்த்திடித் திளமெழுகுபோற்
செய்வதுய ரட்டபந் தனவிதிய தென்றுமறை
 செப்பினை யிலிங்குமாதி
விம்பபீ டத்தணிந் துயர்சம்பு ரோட்சணம்
 வியன்பொழுதி லபிடேகமா
விதிசெய வமைத்தனைகொ லதுபெயர்ந் திடிலரசு
 வியனிராச் சியவிநாசம்
செம்பதும வல்லிதன தம்புயநல் வீடெனத்
 தினமுமக லாதுவாழுஞ்
சிவசிதம் பரவாச சிவகாமி யுமைநேச
 செகதீச நடராசனே.

**குடமுழுக்கின் உட்பொருள் :**

அறிவற்ற பொருள்களால் விளையும் ஆற்றல் சடசக்தி எனப்படும். மின் சக்தி முதலியவற்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இறைவனுடைய சக்தி சித்சத்தி, (சித்து – அறிவு) இந்தத் தெய்விக ஆற்றல் திருக்கோயில்களில் பிரமரந்திரம் எனப்படும் விமான உச்சித்துளை வழியாக விமானக்கலசம் வரை ஊடுருவி நிற்கிறது, வானொலி நிலையங்களில் அமைக்கப் படும் ஒலி அலைகளை வாங்கி உலகில் பரவச்செய்யும் கருவி போலத் தெய்விக ஆற்றலைக் கலசம் வெளிப்படுத்தி நிற்கிறது அதனால்தான் கலசங்கள் செம்பினால் இயன்றதாக அமைக்கப் படுகிறது. அஷ்டபந்தனம் இல்லாத மூர்த்திகளில் தெய்விக ஆற்றல் நிலைபெறாது. ஓட்டைக்குடத்தில் தண்ணீர் தேக்கி வைத்தல் முடியுமா? அஷ்டபந்தனம் தெய்விக மூர்த்திகளுக்கு இன்றியமையாதது. யாகசாலை என்பது சர்வலோக நாயகனாக

விளங்கும் இறைவன் எழுந்தருளும் தற்காலிக இடமாகும். திருக்கோயில் கருவறைகளைத் தூய்மை செய்ய, குறிப்பிட்ட சில நாட்களில் இறைவனைக் கடங்களில் எழுந்தருளச் செய்து யாக சாலைகளைக் கலையழகோடு மிளிரச் செய்து அதில் எழுந்தருளச் செய்து யாகங்கள், வேதசிவாகம பாராயணம், மங்கல வாத்தியங்கள், இன்னிசை, சமய விரிவுரைகள் முதலியவற்றால் சிறப்பாகக் கொண்டாடித் தரிசித்து மகிழ்கின்றோம்.

**திருக்கோயில் வழிபாடு :**

இறைவன் எங்கும் இருக்கின்றார். கோயிலில் அவர்தம் அருளைப்பெறும் வகையில் வெளிப்பட்டு நிற்கின்றார். சுந்தரர் வரலாற்றில் இறைவனை மகிழ மரத்தடியில் எழுந்தருளுமாறு வேண்டிக்கொண்டதாகக் காண்கின்றோம். இறைவனைப் பக்தி விசுவாசங்களினால்தான் நாம் காணமுடியும். ''காதன்மையால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே'' என்றும், அன்போடு அகங்குழைந்து உருகுவார்க்கு அல்லாமல் ஏனையோர்க்கு இறைவன் தோன்றான் என்றும் அப்பர் சுவாமிகள் அருளிச் செய்கின்றார்கள். திருக்கோயில்கள் இறைவனது ஆற்றல் தேங்கி நிற்கும் இடங்கள். மின்னலாற்றலைத் தேக்கி நிற்கும் நிலையங்கள் போலவும், அணைக்கட்டுகளில் தண்ணீர் தேங்கி நிற்குமாறு போலவும் தெய்வ ஆற்றல் தேங்கி நிற்கும் இடங்களாகக் கோயில்கள் உள்ளன. இதனை உணர்ந்து மக்கள் இறையருள் பெறத் திருக்கோயில்களுக்குச் சென்று இறைவன் திருவருளைப் பெறுதல் இன்றியமையாதது.

**திருப்புறம்பயச் சிறப்பு :**

திருப்புறம்பயம் ஊழிக் காலத்திலும் அழியாத இயல்புடையது. புறம்பு - அயம் என்று பிரித்துப் பொருள் காணல் வேண்டும். ஊழிக்காலத்துப் பிரளய வெள்ளம் புறம்பே நிற்க அழியாது விளங்கிய தலம் என்ற பொருளுடன் இத்தலம் விளங்குகிறது. புறத்தே நீர்வளம் பெற்றது என்ற நிலையிலும் இத்தலம் உள்ளது என்றும் கொள்ளலாம். ஊழி வெள்ளத்தில் அழியாது மிதந்த பிறிதொரு திருத்தலம் சீகாழி.

இத்தலம் ஆதித்த சோழ மன்னன் பல்லவன் துணையோடு பாண்டியனைப் புறங்கண்ட இடம் என்ற வரலாற்றுச் சிறப்புக்குரியதாக விளங்குவது. வன்னி, கிணறு, இலிங்கம் ஆகியவற்றுடன் இறைவன் வணிகனுக்கு நடைபெற்ற திருமணத்தினை

உலகோர் அறியச் சாட்சி கூறியருளிய தலச்சிறப்புடையது. மணிவாசகர், ''புறம்பயமதனில் அறம்பல அருளியும்,' என்று இத்தலத்திறைவன் அறமுரைத்த பாங்கை அருளிச் செய்கின்றார்.

**திருவாயில் திறப்பு :**

இத்திருக்கோயிலில் அம்பிகை திருக்கோயிலுக்கு எதிரே அமைக்கப்பெற்ற வாயிலைத் திறந்து வைக்கும் பேற்றைத் திருவருள் நமக்கு வழங்கியிருக்கிறது. திருமறைக்காட்டில் வேதங்களால் அடைக்கப்பெற்ற திருக்கதவுகளை ஞானசம்பந்தர் முன்னிலையில் அப்பரடிகள் திறந்தருளினார். திருஞானசம்பந்தர் திருமடத்து மகாசன்னிதானத்தின் முன்னிலையில் வேதாரணியம் நிகழ்ச்சியை நினைப்பூட்டும் வகையில் வரணி ஆதீனகர்த்தரும் உடனிருக்க இத்திறப்புவிழா நிகழ்ந்துள்ளது. நாளை திருக்கோயில் மகா கும்பாபிஷேகத்தைக் கண்டு மகிழ இருக்கிறீர்கள். எல்லோரும் பார்த்துத் தரிசிப்பதற்குத்தான் விமான கும்பாபிஷேகம் நிகழ்கிறது. கருவறை விமானம் சிரசு; மூர்த்தி உயிர். கும்பாபிஷேகம் ஒரு குழந்தையின் பிறப்புக்கு ஒப்பாகக் கருதற்குரியது. கும்பாபிஷேகத்தின் போது மூலவரைத் தரிசிக்க இயலாதவர்கள் பின் நிகழும் மண்டலாபிஷேகத் திருநாட்களில் ஒருநாளில் இறைவனை வழிபாடு செய்யலாம். ஆண்டுதோறும் கும்பாபிஷேக நாளில் சம்வத்சராபிஷேகம் நிகழும். நமது சமய வழிபாடுகளில் அமைந்துள்ள இத்தகைய நுணுக்கமான உண்மைகளை மக்கள் உணர்ந்து இறைவழிபாடுகளில் தம்மை ஈடுபடுத்தி வாழ்தல் வேண்டும். இத்தகைய மகா கும்பாபிஷேகத்தை மதுரையாதீனம் மகாசந்நிதானம் அவர்கள் சிறப்பாகச் செய்விப்பது பாராட்டுக்குரியது. அன்பர்கள் மகா கும்பாபிஷேகத்தைத் தரிசித்து இறைவன் திருவருள் பெற்று இன்புறுவார்களாக.

நன்றி—'**திருவருட் செய்தி**'



தலவரலாறு

## திருவையாறு

காவிரி வடகரைத் தலங்களில் 51வது தலமான திருவையாறு பஞ்ச நதம், பூலோககயிலாயம் எனவும் வழங்கப்படும். சூரியபுஷ்கரணி, சந்திரபுஷ்கரணி, கங்கை, பாலாறு, நந்திவாய் நுரை, நந்தி தீர்த்தம் என்னும் ஐந்து தெய்வீக ஆறுகள் தம்முட் கலப்பதால் திருவையாறு அல்லது பஞ்சநதம் எனப் பெயர் பெற்றது என்று கூறப்படுகிறது. தஞ்சையிலிருந்து திருவையாறு வரும் வழியில் வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டியாறு, காவிரியாறு என்னும் ஐந்து ஆறுகள் ஓடுவதாலும் ஐயாறு எனப் பெயர் பெற்றதாகச் சிலர் கூறுவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கயிலைக்குச் சென்று அங்கு இறைவனும் இறைவியுமாக இருக்கும் காட்சியைக் காண விரும்பினார். அதனால் வடநாட்டு யாத்திரை செய்து, இமய மலை மீதேறிப் பல இன்னல்களுடன் நடந்து கடைசியில் உடல் கால்கள் கைகள் எல்லாம் தேய்ந்து அசைய முடியாத நிலையில் ஓரிடத்தில் தங்கிவிட்டார். அந்நிலையில் இறைவன் ஒரு முனிவராகத் தோன்றி ஒரு பொய்கையைக் காட்டி ''இதில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்து கயிலைக் காட்சியைக் காண்பாய்'' எனப் பணித்தவண்ணம் திருநாவுக்கரசரும் இறைவர் காட்டிய பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் வடமேற்கே உள்ள குளத்தில் எழுந்து கரையேறித் திருக்கோயிலை நோக்கிச் செல்லும் வழியில் சராசரங்கள் எல்லாம் ஆணும் பெண்ணுமாய் இணைந்து நின்று காட்சியளிக்கக் கண்டார். அவற்றைச் சிவமும் சத்தியுமாக வழிபட்டுத் திருக்கோயிலையடைந்தார். திருக்கோயில் கயிலாயமாகக் காட்சியளிக்க மரகதக்கொடி படர்ந்த பவள மலை போல உமாதேவியாரோடு வீற்றிருந்த சிவபிரானைக் கண்டு தரிசித்து ஆனந்தக் கண்ணீர் பெருக உச்சிமேற்கரங்குவித்து ஆடிப்பாடினார். பிரமவிஷ்ணுவாதிதேவர்கள் இறைவர்திருமுன்பு கைகுவித்து நின்று துதிக்கும் காட்சியைக் கண்டார். பிறகு கயிலாயக் காட்சி திருவையாறாக மாறியது. இக்காரணத்தால் இத்தலம் பூலோக கயிலாயம் என வழங்கப்படுகிறது. திருநாவுக்கரசருக்கு இறைவர் கயிலைக் காட்சி தந்தருளிய ஐதிகம் ஆடி அமாவாசையன்று விழாவாக நடத்தப்பட்டுவருகின்றது.

இத்தலத்தில் இந்திரன் சூரியன் வருணன் வாலி திருமகள் அகத்தியர் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர். இத்திருக் கோயில் ஆதிசைவர் ஒருவர் காசிக்குச் சென்று குறிப்பிட்ட காலத்தில் திரும்பிவராமையால் பூசைமுறை தவறியது. அப் பொழுது ஐயாறப்பர் அந்த ஆதிசைவரின் வேடந்தாங்கித் தன் னையே பூசித்துக் கொண்டார். இதனைத் திருவாசகம் ''ஐயா றதனிற்சைவனாகியும்'' எனக்குறிப்பிடுகிறது. இது ஆத்மபூஜை எனப்படும். இந்த ஐதிகம் இங்குச் சித்திரைப் பெரும் திருவிழா ஐந்தாம் நாளில் நிகழ்த்தப்படுகிறது.

சுசரிதன் என்ற அந்தணச் சிறுவன் ஐயாறப்பரை நாள் தோறும் வழிபட்டு வந்தான். இளம்பருவத்திலேயே அவன் ஆயுள் முடிவடையும் விதி இருந்தமையால் குறிப்பிட்ட காலத்தில் இயமன் அச்சிறுவனின் உயிரைக் கவரவந்தான். இறைவரைத் தவறாது வழிபட்ட தெய்வபலத்தால் இதையறிந்த சுசரிதன் கோயிலை நோக்கி ஓடினான். தெற்கு வாயிலில் ஐயாறப்பர் சோதி வடிவாகத் தோன்றி இயமனை விரட்டி அவ்வந்தணச் சிறு வனை ஆட்கொண்டார். தெற்கு வாயிலில் ஆட்கொண்டார் என்ற திருநாமத்தோடு எழுந்தருளியுள்ளார். அவருடைய சந் நிதிக்கு முன்னே மக்கள் குங்குலியம் தூபம் இட்டு வழிபட்டு வருகின்றனர். ஆட்கொண்டார் சந்நிதிக்கு தென்மேற்கு மூலை யில் இருப்பவர் ஓலமிட்டபிள்ளையார் எனப்படுபவர்.

சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான்பெருமாள் நாயனா ரும் காவிரி தெற்குக் கரையில் உள்ள தலமான திருக்கண்டியூரை வணங்கியபோது எதிரேயுள்ள திருவையாற்றை வணங்க விரும் பினர். இடையிலேயிருந்த காவிரி நதியில் வெள்ளப் பெருக்கு மிகுதியாக இருந்தமையால் அக்கரையிலிருந்தபடியே சுந்தர மூர்த்தி சுவாமிகள் 'ஐயாறுடைய அடிகளோ' எனறு பாடிய வளவில் இறைவர் உலகமெல்லாம் கேட்கும்படி 'ஓலம்' என்று மொழிகொடுத்து மேற்பகுதி வெள்ளத்தைப் பளிங்குபோல் நிறுத்தி வைத்தும் கிழக்குப் பகுதி வெள்ளத்தை வடிய வைத்தும் நடுவே வழிகாட்டினார். சுந்தரர் பெருமானும் சேரமான் பெரு மாளும் காவிரியைக் கடந்து திருவையாற்றை வழிபட்டு மீண்டனர் என்று பெரியபுராணங் கூறுகிறது.

சிலாதமுனிவருக்குத் திருமகனாய் அவதரித்து திருநந்தி தேவர் சுயசாதேவியை மணந்துகொண்டு ஐயாறப்பரைப் பூசித்துச் சிவசாருப்யம் பெற்றார் என்று தலவரலாறு கூறுகிறது. இதனையுட்கொண்டு சேக்கிழார் பெருமான் ''நந்தி அருள் பெற்ற நன்னகர்'' என இத்தலத்தைப் போற்றியுள்ளார். நந்தி தேவர் திருமணத் திருவிழா பங்குனி மாதத்தில் நடைபெறுகிறது. அப்பொழுது அம்மையப்பர் ஒரு தனி வெட்டிவேர் பல்லக்கிலும் நந்திதேவர் ஒரு வெட்டிவேர் பல்லக்கிலும் திருமழபாடிக்கு எழுந்தருளி அங்கே நந்திதேவருக்குத் திருமணத்தை முடித்துக்கொண்டு அன்று இரவே ஐயாற்றுக்கு திரும்பஎழுந்தருளுவர்.

இங்குச் சித்திரை மாதத்தில் பிரம்மோற்சவம் என்ற பெருந்திருவிழா நடைபெறுகிறது. இந்த விழாவின் இறுதியில் ஐயாறப்பர் தேவியுடன் ஒரு கண்ணாடிப் பல்லாக்கில் திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், ஆகிய ஊர்களுக்கு எழுந்தருள அந்தந்த ஊர்களின் இறைவரும் தனித்தனிப் பல்லாக்குகளில் எதிர்கொண்டு அழைத்து உடன் தொடர மறுநாள் ஐயாற்றுக்கு எழுந்தருளுவர். இந்த விழாவில் திருநந்தி தேவரும் சுயசா தேவியுடன் எழுந்தருளுவார். இதுவே ஸப்த ஸ்தானத் திருவிழா என்னும் ஏழூர் விழாவாகும். இலட்சக்கணக்கான மக்கள் தரிசிக்கும் அரிய விழா இதுவாகும்.

இத்தகு சிறப்புகள் பெற்ற இத்தலம் சம்பந்தர் பதிகம் 5, அப்பர் பதிகம் 12, சுந்தரர் பதிகம் 1, ஆக மூவர் திருப்பதிகங்கள் மொத்தம் 18 பெற்ற பெருமையுடையதாகும். திருத்தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்தில் இருந்து வரும் ஐந்து பிராகாரங்களுடன் கூடிய அழகிய பெருங்கோயில். தஞ்சாவூருக்கு வடக்கே 12 கி. மீ. தொலைவிலும் கும்பகோணத்துக்கு மேற்கே 32 கி.மீ. தொலைவிலும் இத்தலம் உள்ளது. தஞ்சாவூர், கும்பகோணம், கல்லணை முதலிய இடங்களிலிருந்து பேருந்துகள் வருகின்றன. இறைவர் பெயர் — ஐயாறப்பர், பஞ்சநதேசுவரர், செம்பொற் சோதிநாதர், பிரணதார்த்திஹரேசுவரர் முதலியன. இறைவி பெயர்—அறம்வளர்த்தநாயகி (தர்மஸம்வர்த்தனி); தீர்த்தம்-சூரிய புஷ்கரிணி, காவிரி; தலவிருட்சம்-வில்வம்.



# பதிகப் பெருவழி—51

## திருவையாறு

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருப்பதிக வரலாறு

திருப்பழனத்தில் முக்கட் பரமேட்டியாகிய சிவபிரானைத் தொழுது அங்கிருந்து திருஞானசம்பந்தர் திருவையாறு சென்றடையும் பொழுது திருவையாற்றில் வாழும் தொண்டர்கள் அனைவரும் ''நாடுய்யப் புகலிவரு ஞானபோனகர் நண்ணினர்'' என்று ஊர்முழுவதும் அலங்காரம் செய்து மிகுந்த மனக்களிப்பினோடும் எதிர்கொண்டு அழைத்தனர். தொண்டர்கள் உடன் வர, திருஞானசம்பந்தர் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி நந்தியெம்பெருமான் சிவபிரானிடத்து அருள் பெற்ற நன்னகராகிய ஐயாற்றை வணங்கி, ''ஐந்து புலன் நிலைகலங்கும் இடத்து அஞ்சேல் என்பார்தம் ஐயாறு'' என்று போற்றிசைத்த ''புத்தி நிறை செந்தமிழின் சந்த இசைத்'' திருப்பதிகம் இதுவாகும்.

**பண்–மேகராகக் குறிஞ்சி**

திருச்சிற்றம்பலம்

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் (று)
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே. 1

ஐந்து புலன்களும் ஐம்பொறிகளில் பொருந்தாது கலக்கமுற்று நெறி மயங்கி அறிவு அழிந்து படவும், கபம் எனப்படும் கோழையானது மேலுக்கேறி நெஞ்சையடைக்கவும், உயிரானது உடலைவிட்டுப் பிரியும் சமயம் சுழன்று வருந்தவும் ஆகும் காலத்து ''அஞ்சேல்'' என்று அவ்வுயிர்க்கு அபயம் அளித்தருளுபவராகிய சிவபெருமான் விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் கோயில், வலம் வந்த பெண்கள் நடனம் ஆட அதன் பொருட்டு வாசிக்கப்படும் மத்தளம் பேரொலி செய்ய (அதனைக்கேட்டு) சில மந்திகள் மழை வருகிறதோ என்று அஞ்சி மனங்கலங்கி மரங்களின் மீதேறி வானத்தை அண்ணாந்து மேகத்தைப் பார்க்கும் திருவையாறு ஆகும்.

விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையொடும்
அடலேறொன் றதுவேறி அஞ்சொலீர்
பலியென்னும் அடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியின்
உடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்(கு)
ஈன்றலைக்குந் திருவையாறே. 2

விடம் மேலே ஏறுதலையுடைய பாம்பினைத் தமது அரையில் கச்சாகக் கட்டி, மலையரசன் மகளான பார்வதி தேவியாரோடும் வலிமையுள்ள எருதின்மீதேறிக் கொண்டு, ''அழகிய சொற்களையுடைய பெண்களே, பிச்சையிடுங்கள்'' என்று கூறும் சிவபிரானாரது கோயில், வளைந்த மூக்கினையுடைய சங்குகள் கடலின் மேல் மிதந்து (மழைத்துளிகளைப் பெற்றுக் கருவுற்று) கடல் அலைகள் மோதிய வேகத்தால் தள்ளப்பட்டுக் காவிரியில் படிந்து வந்து, இரவு தங்கிப் பின்னர் கரையேறிச் செழுமையான முத்துக்களை ஈன்று அலைத்தலைச்செய்யும் திருவையாறு ஆகும்.

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால்
இறகுலர்த்திக் கூதல்நீங்கிச்
செங்கால்நல் வெண்குருகு பைங்கானல்
இரைதேருந் திருவையாறே. 3

கங்காளர், கயிலாய மலையாளர், கானப்பேர் என்னும் தலத்தில் பேரரசு செலுத்துபவர், உமாதேவியாரை ஒருபங்கிலே உடையவர், முத்தலைச் சூலத்தைப் படையாகக் கொண்டவர், எருதினை வாகனமாகக் கொண்டவர் என்றின்னோரன்ன பெருமைகளையுடைய சிவபிரானார்எழுந்தருளியிருக்கும் கோயில் தேன் நிறைந்த சோலையில் நுழைந்து சிவந்த காலையும் வெண்மையான நிறத்தையுமுடைய நாரையானது தனது கூர்மையான அலகினால் தனது சிறகைக் கோதி உலர்த்தி குளிரினின்றும் நீங்கிப் பசிய கடற்கரைச்சோலையில் இரை தேடுகின்றதிருவையாறு ஆகும்.

ஊன்பாயும் முடைதலைகொண் டூரின்
பலிக்குழல்வார் உமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங்கோயில்
மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே. 4

தசை உலர்ந்து பரவிய முடைநாற்றமுடைய பிரம கபாலத்தைக் கையிலேந்தி ஊர்தோறும் பிச்சைக்கு உழல்பவரும், உமாதேவியாரை ஒரு பாகத்திலே உடையவரும் பாயும் விடையின் மீது ஏறும் சங்கரரும், தழல் உருவருமாகிய சிவபிரான் தங்கும் கோயில், மான்கள் பாய (அதனால் அச்சமுற்ற)மந்திகள் வயலருகேயுள்ள மரங்களின் மேலேறி மடுக்கள் தோறும் பாய அதனால் மரங்களில் உள்ள தேன் கூடுகள் உடைந்து தேன் அம் மடுக்களில் பாய, (நீர் கலங்குதலால்) மீன்கள் அருகேயுள்ள தாமரை மொட்டுக்களின் மேல் பாய அதனால் அம்மொட்டுகள் மலர்கின்ற திருவையாறு ஆகும். (காரண காரிய நிகழ்ச்சிகளை ஒன்றன்பின்னொன்றாக வைத்து பின்னிரண்டு அடிகளில் அழகியதொரு இயற்கைக் காட்சி கூறப்படுகிறது)

நீரோடு கூவிளமும் நிலாமதியும்
வெள்ளெருக்கும் நிறைந்த கொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடும் அரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலும் திருவையாறே. 5

கங்கை நீரோடு வில்வமும், நிலவினைப் பொழியும் சந்திரனும், வெள்ளெருக்கம்பூவும், கொன்றைப் பூமாலையும் அதனுடன் குளிர்ச்சியுடைய கரந்தை மலரும் திருச்சடையில் அழகாக அணிந்த மெய்ப்பொருளாகிய சிவபிரானார். தங்கும் திருக்கோயில், மேகமண்டலத்தை அளாவி ஆகாயத்தை அளந்த மணம்கமழும் பொழில்கள் சேர்ந்துள்ள, மலர் மாலைகளின் மணங்கமழும் தேர்கள் ஓடுகின்ற வீதியிலே உள்ள அரங்குகளில் மகளிர் நடனம் ஆடும் திருவையாறு ஆகும்.

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங்கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 6

தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் அரசனாகவும், நல்வழி காட்டும் திறமையானவனுமாகி நறிய மணங்கமழும் கொன்றைப் பூமாலையைச் சடைக்கு அணிந்த புண்ணிய மூர்த்தியாகிய சிவபெருமானார் தங்கியிருக்கும் கோயில். காந்தாரப் பண்ணினையமைத்து மகளிர் இசைபாட அழகிய வீதியிலே யமைந்த அரங்கில் சில பெண்கள் ''தேம் தாம்'' என்ற ஒலி உண்டாகும்படி இசைக்கப்படுகின்ற வாத்தியங்களின் ஒலிக்கு ஏற்ப நடனம் ஆடுகின்ற திருவையாறு ஆகும்.

நின்றுலா நெடுவிசும்பில் நெருக்கிவரு
புரமூன்றும் நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. 7

நின்று உலாவும் நெடிய வானவீதியில் நெருங்கி வருகின்ற மூன்று புரங்களையும் நீண்ட கூர்மையானவாயுடைய அம்பு சென்று பாயும்படி வில்லை வளைத்த திருக்கயிலாய மலையுடைய சிவபிரானார் சென்று அடையும் திருக்கோயில், குன்றுகளிலெல்லாம் குயில்கள் கூவத், தேன் மலர்களினின்றும் பாய்ந்து அதனால் மணம்மிகுந்த தென்றல்காற்று அடிவருடச் செழுமையான கரும்பு கண்வளரும் திருவையாறு ஆகும்.

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
அரக்கர்கோன் தலைகள்பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக்(கு)
அருள்புரிந்த மைந்தர் கோயில்
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ
இளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவையாறே. 8

சிறிதும் அஞ்சாது திருக்கயிலாயமலையைப் பெயர்த்தெடுக்க முனைந்தவனாகிய இராவணனது பத்துத் தலைகளும் வலிமை நிறைந்த அவனது தோள்களும் நெரியும்படி அவனை ஒரு கால்விரலால் ஊன்றி நெருக்கிப் பின்னர் அவனுக்கு அருளும் புரிந்த இறைவரது கோயில், இனிய மரநிழலில் ஒரு இளம் தென்னைமரத்தின் முற்றின காய் வீழ, அதனால் அங்கு இருந்த ஒரு இளம் எருமைக் கன்று பயந்து ஓடி, வயல்களில் உள்ள செந்நெற்கதிர்களை மிதித்துச் சென்று தாமரை மலர்கள் பூத்திருக்கும் ஒரு வயலில் தங்கும் திருவையாறு ஆகும்.

மேலோடி விசும்பணவி வியன்நிலத்தை
மிகவகழந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 9

அன்னப்பட்சியாகி மேலே பறந்து ஆகாயத்தை அணவித் தேடியும், அகன்ற நிலத்தை மிகவும் அகழ்ந்து சென்று மிக்குத் தேடியும் பிரமதேவனோடு திருமாலாகிய இவர்கள் அறியவொண்ணாதபடி அக்கினிப்பிழம்பாக நின்றவனாகிய சிவபிரான் நிலையாக எழுந்தருளியிருக்கும் கோயில், நடனம் பயிற்றுவிக்கும் நட்டுவனாரின் கையில் உள்ள சிறு தாளக்கோல் இசைக்கு ஏற்றவாறு தாளமிட்டு விரைவாக அசைய, அவ்விசைக்கும் தாளத்திற்கும் ஏற்றாறு அழகிய திரண்ட வளையல்களையணிந்த இள்ம் பெண்கள் நடனம் ஆட குவிந்து திரண்ட நகில்களையுடைய அப்பெண்களின் அழகிய முகத்தினின்று கயல் மீன்கள் போன்ற கண்கள் விரைவாக அசையவும், வில்போன்ற புருவ்ம் அசைய்வும் அவர்கள் ஆட, மேலும் சிலபெண்கள் நடனமாடுதலைச்செய்கின்ற திருவையாறு ஆகும்.

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
ஆளாமின் மேவித்தொண்டீர்
எண்டோளர் முக்கண்ணர் எம்மீசர்
இறைவர்இனி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறு 10

பருத்த உடலும் குறுகிய உடையும் கொண்ட சமணர்ககளோடு பௌத்தர்களும் ஆகியவர்கள் நற்குணங்கள் ஒன்றுமில்லாதவர்களும் முரட்டுத்தனமான வார்த்தைகளைப் பேசும் கொடியவர்களுமாவர். அத்தகையவர்களது வார்த்தைகளைக் கேளாது, தொண்டர்கள், எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையுடைய எமது ஈசராகிய இறைவர் இனிது அமருங் கோயிலாகிய, மலர்செண்டுகளையடித்து வரும் காவிரி நதியின் நீர் செழுமையான நவமணிகளைக் கொண்டு வந்து அலைத்தல் செய்யும் திருவையாறு, மேவி, அப்பெருமானுக்கே ஆட்படுங்கள்.

அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்றெம்
பெருமானை அந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையால இவைபத்தும் இசையுங்கால்
ஈசனடி ஏத்துவார்கள்
தன்னிசையோ டமருலகில் தவநெறிசென்(று)
எய்துவார் தாழாதன்றே. 11

அன்னப்பட்சிகள் நிறைந்த பொழில்கள் புடை சூழ்ந்த திருவையாற்றைக் கோயிலாகக் கொண்ட சிவபெருமானை, அழகிய தண்மையுடைய சீகாழிப்பதியைச் சேர்ந்தவனும்நிலைத்த பெருமையுடைய வேதங்கள் ஓதும் நாவினை உடையவனுமான வளர்கின்ற புகழுடைய திருஞானசம்பந்தன் ஆக்கிய திருவருள் மருவிய பாடல்களாகிய இவை பத்தையும் கொண்டு இன்னிசையோடு கூடுமான காலங்களில் ஈசனது திருவடிகளைத் துதிப்பவர்கள் தமக்குரிய புகழோடு தவநெறியாகிய இந்நெறியால் சிறிதும் தாமதமின்றி தேவலருகு சென்று அடைவர்.

## மாசிமாத அடியவர் வழிபாடு

**எறிபத்த நாயனார்** *(15—2—98)*

சிவனடியார்களுக்குத் தொண்டு செய்வதை தனது தலையாய பணியாகக் கொண்டு வாழ்ந்தவர், கருவூர் ஆனிலைக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமானிடம் மிகுந்த அன்பு கொண்டவர் எறிபத்தர் என்பவர். ஒரு நாள் சிவகாமியாண்டார் என்ற சிவனடியார்க்கு நாட்டு அரசனின் பட்டத்து யானையால் நேர்ந்த துன்பத்தை அகற்றினார். மன்னனால் பாராட்டுப் பெற்று, இறைவனால் இவரது பணி உலகறியச் செய்து இவரது சிவத் தொண்டு மேன்மைப் படுத்தப்பட்டது. எறிபத்த நாயனார் குருபூசை நாள் மாசித்திங்கள் அஸ்தம் நன்னாள்.

**காரி நாயனார்** *(23—2—98)*

காரி என்பவர், திருக்கடவூரில் மறையவர் குலத் துதித்தவர். காசிக்கலம்பகம் என்னும் நூலியற்றினார், அந்நூலினால் பெற்ற பொருள்யாவும் சிவனடியார்களுக்கு ஆவன செய்தார். காரிநாயனார் குருபூசை நாள் மாசித்திங்கள் பூராடம் நன்னாள்.

**கோச் செங்கட் சோழநாயனார்** *(26—2—98)*

எந்நிலையிலும் சிவத்தொண்டு பயனளிக்கும் என்ற பெருமைக்குரியது கோச்செங்கட் சோழன் வரலாறு. முற்பிறவியில் சிலந்திப் பூச்சி, இப்பிறவியில் நாடாளுமன்னனாகிய கோச்செங்கட் சோழன். உயிர்கள், தங்களது நல்வினை தீ வினைக்கேற்ப பிறப்புக்களில் இட மாற்றம் பெறுகின்றன என்ற உயர்ந்த சைவ சித்தாந்தம் உணர்த்தும் சைவ நெறிக்கு எடுத்துக்காட்டு. இப்பிறவியில் பல்வேறு ஆலயங்கள் கட்டுவித்துப்பின் சிவப்பேறு பெற்றார். கோச்செங்கட் சோழநாயனார் குருபூசை நாள் மாசித்திங்கள் சதயம் நன்னாள்.

இந்த நாயன்மார்கள் குருபூசை நாட்களில் மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தார் அ/மி. மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாயனாருக்குக் காலையில் வழிபாடு செய்து, திருத்தொண்டர் புராண சிந்தனை மேற்கொள்வர். -C. S. சொக்கலிங்கம்

## உழவாரம் வளர்ச்சி நிதிக்கு
## ரூ 1001/ வழங்கிப் புரவலர் ஆனோர் :

திருவாளர்கள் :

1) இல. செந்தூர்நாதன் B.E., பாளையங்கோட்டை
2) M. வடிவேல்முருகன், திருநகர், மதுரை
3) R. புலியூருடையான் B.A., காவல்துறை அதிகாரி சென்னை
4) R.S. சண்முகம் செட்டியார், மதுரை
5) சு. நாகசாமி செட்டியார், மதுரை
6) S.M. இராஜேந்திரன், மதுரை



## மணமக்கள் மகிழ்வுடன் வாழ்க!

★ மதுரை, ஓய்வு பெற்ற தமிழாசிரியரும், சிவபூசைச் செல்வருமாகிய புலவர் சி. கல்யாணசுந்தரம் புலவர். க. இராசேசுவரி தம்பதியரின் மகள் K. மீனாட்சிதேவிக்கும் சென்னை R. சொக்கலிங்கம்பிள்ளை மகன் C. ஜோதிக்கும் 1–2–98 சென்னையில் திருமணம் நிகழ்ந்தது. உழவாரம் மணமக்களை வாழ்த்துகின்றது!

★ திருநெல்வேலி C. முருகேசபிள்ளையின் புதல்வன் M. சொக்கலிங்கத்திற்கும் R. ஆறுமுகம்பிள்ளை புதல்வி. பொன்னம்மாள் (எ) சிந்துவிற்கும் 1–2–98 அன்று பெருமாள் புரத்தில் திருமணம் நிகழ்ந்தது. உழவாரம் மணமக்களை வாழ்த்துகின்றது!

★ ஞானவேல் ''ஆசிரியர் நெல்லை சிவமணி புலவர் ம. சிவசம்பு மகன் எஸ். ஞானவேலுவிற்கும் செல்வன் T. சரவணனுக்கும் 1—2—98 அன்று திருமணம் நிகழ்ந்தது. அன்று மாலை நிகழ்ந்த வரவேற்பில் பெருங்குளம் செங்கோல் ஆதீனம் குருமகா சந்நிதானம் சீர்வளர்சீர் கல்யாண சுந்தரதேசிக பரமாசாரிய சுவாமிகள் எழுந்தருளி அருளாசி வழங்கினார்கள். மணமக்களை உழவாரம் வாழ்த்துகின்றது!

★ கலைமாமணி, திருமுறைக்கலாநிதி சீர்காழி எஸ். திருஞானசம்பந்தஓதுவார் மகன் டி. கணேசனுக்கும் ஆர். சோமசுந்தர முதலியார் மகள் ராஜலட்சுமிக்கும் 2-2-98 அன்று திருமணம் நிகழ்ந்தது. வாழ்க மணமக்கள்.

★ மதுரை திருநகர் சைவ ஆதீன சீடர்குழு உறுப்பினர் M. வடிவேல் முருகன் குமாரர் V. மீனாட்சி சுந்தரத்திற்கும் பாளைபங்கோட்டை இல. செந்தூர்நாதன் மகள் சண்முகப்ரியாவிற்கும் திருமணம் பாளைபங்கோட்டையில் 9-2-98 அன்று நிகழ்ந்தது. திருமண விழாவைமுன்னிட்டு ''உழவாரம்'' இதழுக்கு மணமக்களின் பெற்றோர் ரூ. 1001/- தனித்தனியே வழங்கிப் புரவலரானார்கள் மணமக்கள் வாழ்க!.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சிமையம் வழங்கிய 'சித்தாந்த இரத்தினம்' பட்டத்தை உழவாரம் புரவலரும் மதுரை திருநகர் சைவ ஆதீன சீடர் குழுவின் பொறுப்பாளருமாகிய புலியூர் சுப்பிரமணியன், ஒய்வு பெற்ற வட்டாட்சியர் டி.பி. சுப்பையா, மற்றும் தூத்துக்குடி ஏ.டி. இராமலிங்கம்பிள்ளை ஆகியோர் பெற்றுள்ளனர். பட்டம் பெற்றோர் சைவசித்தாந்தச் செந்நெறிக்கு, தொண்டாற்றிட உழவாரம் வாழ்த்துகின்றது.

## செய்திகள்

★ விக்கிரம சிங்கபுரம் சைவநெறிக் கழகத்தின் சார்பில் ஜனவரி மாத சனிக்கிழமைகள் தோறும் சிவப்பிரகாசம் விரிவுரைகளை திரு. குஞ்சிதபாதம் நிகழ்த்தினார். 14-1-98 ஆயில்ய நாளில் மாதவச்சிவஞான முனிவருக்கு வழிபாடு நிகழ்ந்தது.

★ காளையார்கோயிலில் வேதாந்த மடத்தை நிறுவிய ஸ்ரீலஸ்ரீ ஜமீன்தார் சுவாமிகளின் 65வது குருபூஜை 10-1-98 அன்று நிகழ்ந்தது. . இன்னிசை நிகழ்ச்சி மற்றும் அன்னம்பாலிப்பும் நடந்தன.

★ மதுரை அருகிலுள்ள யானைமலை ஒத்தக்கடையில் சிவநெறிக்கழகம் தொடங்கப்பெற்றது. பல தீர்மானங்கள் சமய வளர்ச்சிக்கென நிறைவேற்றப்பட்டன. சு. நீலமேகம் தலைமை ஏற்றார்.

★ வெள்ளகோவில் சிவனடியார் திருக்கூட்டத் தலைவர் ஏ. இராஜாஜி முயற்சியால் திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்தப் பயிற்சி வகுப்பு மையம் 25-1-98 அன்று தொடங்கப் பெற்றது. பி. சக்தி வடிவேல் தலைமையில் சொ.அ.மணிவாசகம் பி. குமாரசாமிக் கவுண்டர் வாழ்த்துரை வழங்கினர்.

★ மதுரை வடக்கு வாசல் ஸ்ரீ செல்லத்தம்மன் கோயில் நான்காம் நாள் திருவிழா யானைவாகனக்காட்சி கே. ஒண்டிப் பிலியாபிள்ளை தமையனார் கே. ராமசாமி பிள்ளை மண்டகப் படியில் நிகழ்ந்தது. நீடாமங்கலம் என்.எஸ். சாமிநாதன் குழு வினரின் சிறப்பு நாதசுர இசை நிகழ்ந்தது. ஒண்டிப்பிலி கே.ஒ.எஸ் நாகராஜன் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார்.

★ காரைக்குடி அழகப்பாபல்கலைக்கழகத்தில் திருநகர் டாக்டர் V.R. இராமநாதன் செட்டியார் நிறுவியுள்ள சைவப் பெரியார் கா. இராமநாதன் செட்டியார் அறக்கட்டளைச் சொற் பொழிவை 27-1–98 அன்று பன்னிரு திருமுறைமன்றச் செயலர் புலவர்நீ.சி. சுந்தரராமன் நிகழ்த்தினார். தமிழ்த்துறைத்தலைவர் டாக்டர் விசுவநாதன் தலைமை வகித்தார். டாக்டர் சொக்க லிங்கம் நன்றி கூறினார்.

★ மதுரை சக்திவேலம்மாள் நகர் திருவள்ளுவர் மன்ற முப்பத்தேழாம் ஆண்டு விழா 31-1–98 அன்று நிகழ்ந்தது. ம. அ. இராமகிருஷ்ணன் தலைமையில் அறிஞர் பலர் கலந்து கொண்டனர். செயலர் புலவர் சு. சிதம்பரம் நன்றிகூறினார்.

★ திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் குருபூஜையை முன்னிட்டு திருநகர் முதியோர் இல் லத்தில் வழிபாடும் மாகேஸ்வர பூஜையும் 3–2–98 அன்று நிகழ்ந்தன. திருநகர் சைவ ஆதீன சீடர்கள் குழுவினரும், மதுரை தமிழ்நாடு சைவ வேளாளர் சங்க நல அறக்கட்டளை யினரும் ஏற்பாடுகளைச் சிறப்புறச்செய்தனர்.

★ திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர் அருள்திருநமசிவாய மூர்த்திகள் குருபூஜை விழா 25–1-98 முதல் 3–2–98 வரை நிகழ்ந்தது. திருமடாலயத்து வேணுவனலிங்க விலாசத்தில் திருவாசகச் சிந்தனை விரிவுரைகள் நிகழ்ந்தன. குருபூஜையன்று சீர்மிகு இளைய சந்நிதானம்

அவர்கள் வழிபாடு செய்து அன்பர்கட்குத் திருநீற்றுப்பிரசாதம் வழங்கி அருளினார்கள். இரவு திருக்கோயில் வழிபாடு, ஞானக் கொலுக்காட்சி நிகழ்ந்தன.

○ காஞ்சிபுரம் திருமுறை மன்றத்தின் சார்பில் 18-ஆம் தைமாத வழிபாடு காசிவிசுவநாதர் கோயிலில் நிகழ்ந்தது. பி. பரிமளம் சொற்பொழிவாற்றினார்.

★ திருக்குடந்தைத் திருமுறை மன்றத்தின் 335-வது சிறப்புச் சொற்பொழிவு 4-2-98 அன்று அ.மி. சோமேசுவர சுவாமி கோயிலில் நிகழ்ந்தது. மா. சிவநேசன் பேசினார். செயலர் திருமுறைச் செல்வன் கே.எஸ்.பி.கே. குஞ்சிதபாதம் நன்றி கூறினார்.

★ ஆச்சாள்புரம் ஸ்ரீகுருஞானசம்பந்தர் பணி மன்றத்தின் சார்பில் கண்ணப்ப நாயனார் குருபூஜை 7-2-98 அன்று நிகழ்ந்தது. டாக்டர் மு. சிவச்சந்திரன் பேசினார். இரா. சிவப் பிரகாசம் உபயமளித்தார்,

○ திருச்சிராப்பள்ளித் திருமுறை மன்றத்தின் 79 மற்றும் 80 ஆவது திருமுறை முற்றோதல் பிப்ரவரி 8,15, தேதிகளில் நிகழ்ந்தன. வே, சிவராகவன் டாக்டர் கு. சுந்தரமூர்த்தி விளக்கவுரையாற்றினர். எஸ். சந்திரகுப்தா, ப. மூக்கப்பிள்ளை ஆகியோர் கலந்து கொண்டனர். எஸ். கணேசன் மற்றும் ஆர். சரவணபவானந்தன் நிகழ்ச்சிகளை ஏற்றுப் போற்றினர்.

○ திரிசிரபுரச் சைவசித்தாந்த சபையின் சார்பில் பிப்ரவரி 1,8,15, ஆகிய ஞாயிற்றுக்கிழமைகளில் சொற்பொழிவு கள் நிகழ்ந்தன. வே. சிவராகவன், சு. காசிவிசுவநாதன், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி விரிவுரையாற்றினர். செயலர் சிவ. பாலகிருஷ்ணன் நன்றி கூறினார். சபைத்தலைவர் ப. மூக்கப் பிள்ளை தலைமை வகித்தார்.

○ வெள்ளகோயில் ஆர். அருணாசலம் செட்டியார் ஏ. கௌரி அம்மாள் பொருளுதவியால் அ.மி. சக்தி விநாயகர் கோயிலில் 9-2-98 அன்று பதினோராம் திருமுறை முற்றோதல் நிகழ்ந்தது. சிவனடியார் திருக்கூட்டத்தலைவர் ஏ. இராஜாஜி தக்க ஏற்பாடுகள் செய்திருந்தார்.

○ வெள்ளகோயில் அ. மி. சோழீசுவரப் பெருமாள் கோயிலில் போற்றித்திருத்தாண்டகங்கள் ஐந்தையும் நூறாயிரம் முறை விண்ணப்பம் செய்யும் விழா 8-2-98 அன்று பி. கே. குமாரசாமி அய்யா, சொ. அ. மணிவாசகம் அய்யா முன்னி லையில் நிகழ்ந்தது. இலட்சார்ச்சனையை சிவனடியார் திருக் கூட்டத்தலைவர் கயிலைமணி ஏ. இராஜாஜி நடத்திக்கொடுத் தார்.

○ கல்லூரி மாணவர்க்கான பன்னிருதிருமுறைப் பயிற்சி வகுப்பு 9-2-98 அன்று கும்பகோணம் அ. மி சுந்தரவிநாயகர் ஆலய மண்டபத்தில் தொடங்கப் பெறறது. முனைவர் சிவ. திருச்சிற்றம்பலம் குறிக்கோளுரை ஆற்றினார்; கல்லூரி முதல்வர் எம். அனந்த நாராயணன், த. கோதண்டபாணி, வி சுப்பிரமணி யன், கோபாலன், முனைவர் சாமி. தியாகராசன் முதலிய சான்றோர் பங்கு பெற்றனர்.

## குருவருள் மொழி

**ஒருவர் அழுகை பலருக்கு மகிழ்ச்சி :**

சமய ஆசாரியர்களைப் போற்றி வழிபடுவது சமய வளர்ச்சிக்கு உறுதுணை புரியும் வையகம் அனைத்தும்துயர்தீர்ந்து மக்கள் நல்வாழ்வு பெறுதற் பொருட்டு வாழ்ந்தருளிய ஞான சம்பந்தர் போன்ற பெருமக்களை உலகம் நன்றியோடு வழிபடக் கடமைப்பட்டுள்ளது. ஞானசம்பந்தர் அன்று அழுததால்தான் இன்று நாம் மகிழ்ச்சியோடு வாழ்கிறோம். பிறந்த குழந்தை அழுதால் தான் பெற்றோர் சிரிப்பர். குழந்தை அழமறந்தால் உற்றார் அழுவர் என்று கூறுவார்கள். ஞானசம்பந்தர் அழுகை யால் உலகமே மகிழ்ச்சியுற்றது என்று கூறுகின்றார் சேக்கிழார்-

''கண்மலர்கள் நீர்ததும்பக் கைமலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிபதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை யொலிபெருக எவ்வுயிரும் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார்''

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு.

—தருமைக்குருமணி. நன்றி : **திருவருட் செய்தி**



# திருமுறைகளில் சமுதாய நோக்கு

ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் எம்.ஏ., எம்ஃபில்., பி.எச்.டி

நினைப்பது மனிதனுடைய சுதந்திரம். ஆனால் நினைப்பதிலேயே காலத்தைக் கடத்திவிட்டால் செயல்படுத்துவது எப்போது? செயல்படாமல், உழைக்காமல், இனாம்பொருளை வாங்கியே வாழ்க்கையை நடத்திவிடலாம் என்பது வாழ்க்கையை ஏழ்மைக்குக் கொண்டுசெல்லும். ஏழ்மை என்பது எந்தவொரு காலகட்டத்திலும் மனித சமுதாயத்தை ஆளக்கூடாது என்று அருளாளர்கள் விரும்பி இருக்கிறார்கள். ''வறுமை என்பது போகம் துய்க்கப்பெறாத பற்றுள்ளம்'' என்று பேராசிரியர் உரை காண்பார். உலகத்தில் கையில் பணம் இல்லாதவர்களை மனைவியோ, தாயோ, உறவினரோ மதிக்கமாட்டார்கள். இது சமுதாயத்தில் என்றும் நிலைத்துநிற்கின்ற கருத்தாகும்.

''இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பென்னும் - சொல்லாலே'

என்று திருக்கயிலாய ஞானஉலாவும்,

''நல்குரவெனும் தொல்விடம் பிழைத்து''

என்று திருவாசகமும்,

''நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்: நிரப்பினுள்
யாதொன்றும் கண்பா டரிது''

என்று குறளும் வறுமையினுடைய கொடுமையைக் குறிப்பிடுகின்றன. ஆகவே இவ்வறுமை நீங்க வேண்டுமானால் மனிதன் உழைக்க வேண்டும். உழைப்புக்கு விஞ்சியது இவ்வுலகத்தில் எந்தவொரு சக்தியும் கிடையாது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகைப் பொருள்களால் கிடைக்கும் பயனே இவ்வுழைப்பிலே கிடைத்துவிடும். அதனால்தான்,

''உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ''

என்று பட்டினத்தார் அருளுவார். உழைக்காத சோம்பேறிகள் வாழத்தகுதியற்றவர்கள் அவர்களைத் தண்டித்தாவது உழைப்பவராக ஆக்கவேண்டும் என்று உழைப்புக்கு உயர்வளித்தவர்கள் நம்முடைய அருளாளர்கள்.

''நின்பணி பிழைக்கிற் புளியம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனிவாய் கச்சியே கம்பனே''

என்று உழைப்பினால் முன்னேற வேண்டும், உண்ண வேண்டும், வாழ வேண்டும் என்று வழங்கி இருக்கிற அருள்கொடை சமுதாயத்திற்கு நாயன்மார்கள் செய்த பெருங்கொடையாகும்.

**எதிர்காலச் சமுதாயம் :**

இன்றைக்குச் சமுதாயத்தில் இளைஞர்களோ, பெரியவர்களோயாராக இருப்பினும் தம்மைச்சுற்றி எத்தகைய கேடுகள் சூழ்ந்து இருக்கின்றன. அந்தக் கேடுகளால் தமக்கு எவ்வளவு பெரிய ஆபத்து இருக்கிறது என்பதை உணராமலேயே வாழ்ந்து வருகிறார்கள். பொய்மையிலேயே வாய்மை இருப்பதாக நம்பி இருக்கிறார்கள். மயக்கத்திலே ஒரு தெளிவு இருக்கிறது என்று மோசம் போய்க்கொண்டிருக்கிறார்கள். தமக்கு ஏற்படுகிற ஒரு ஆபத்தைக்கூட உணராத மக்களைப் பார்த்து ஆன்றோர்கள் வேதனைப்பட்டுத் துடித்து இருக்கிறார்கள். இப்படிப்பட்ட மக்களுடைய வாழ்க்கை எப்படி இருக்கிறது? ஓர் அடுப்பிலே உலைவைத்து, அதிலே ஆமையைப் போட்டு மூடிவிட்டுக் கீழே நெருப்புவைத்து எரிக்கிறார்கள். சூடு ஏறிக்கொண்டே இருக்கிறது. இளஞ்சூடு இதமாக இருப்பதாக ஆமை நினைக்கிறது. அதிலே ஒரு மகிழ்வு இருப்பதாக நினைக்கிறது. அந்த மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்தாடுகிறது. ஆனால் அவ்வெந்நீர் கொதித்தவுடன் அந்த ஆமை துடிதுடித்து இறந்துவிடுகிறது. இப்படித்தான் இச்சமுதாயம் இருக்கிறது என்று தெளிவில்லாத மக்களைத் திட்டித் தீர்த்தார்கள்.

''வளைத்து நின்றவர்கள் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்து வைத்துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்து நின்றாடுகின்ற வாமைபோற் றெளிவிலாதேன்
கிளைத்து நின்றாடுகின்றேனென் செய்வான்றோன்றினேனே''

இப்படித் தெளிவில்லாத மக்களைத் திட்டிய அருளாளர்கள் தீய வழியில் தம் வாழ்நாளை வீணாக்குவதையும், நெருப்பு என்று தெரிந்து விழுந்து சுட்டுக்கொள்வதையும்' தம்மால் எவ்வித ஆக்கமோ, கேடோ ஏற்படாமல் தமக்கு ஏதும் அனுபவிக்க முடியாமல் போய்ப் பாரின்பப்பாழும் கும்பியில் வீழ்ந்துவிடுவதைத் தடுக்க முயன்றும் தம்முடைய துடிப்பால், வாழ்ந்துவருகின்ற

சமுதாயத்தில் தாம் தனியே நின்று பேசமுடியாமல் தவித்தும் இருக்கிறார்கள். இது பெரியோர்களுக்கு உள்ள இயல்பு அன்றோ? அவர்களால் என்ன செய்ய முடியும்? இதை ஓர் உவமை மூலம் காட்டுகிறது ஈங்கோய் எழுபது. அழகிய இதழ்களை உடைய செங்காந்தட்பூ பூத்திருக்கிறது. அப்பூவிலே தேனை உண்ணு வதற்காக வண்டுகள் உள்ளே சென்று அருந்துகின்றன. இக்காட் சியை மரத்திலிருந்து ஒரு குரங்கு பார்க்கிறது. ''அய்யோ இவர்கள் தீயில் வீழ்ந்துகொண்டு இருக்கிறார்களே, இவர்களை எப்படிக் காப்பாற்றுவது? என்று கைநெரிதது்க் கண்கலங்கும் காட்சியைக் காட்டுகிறார்கள்.

''வழகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்தீ
முழுகியதென் றஞ்சிமுது மந்தி - பழகி
எழுந்தெழுந்து கைநெறிக்கும் ஈங்கோயே திங்கட்
கொழுந் தெழுந்த செஞ்சடையார் குன்று''

இக்காட்சி பழயனூரில் பார்ப்பனியை அவள் கணவன் கொன் றான் அவள் அவனைப் பழிவாங்க எண்ணி மறுபிறவியில் புரிசை கிழார் என்னும் வேளாளர்க்குப் பிறந்தாள். தோற்றத்தைக் கண்டு அவளைப் பேயென்று ஊரார் புறக்கணித்தனர். முற் பிறப்பின் கணவனாகிய பார்ப்பான் தரிசனச் செட்டி என்னும் பெயரொடு பிறந்திருந்தான். அவனைக் கண்டதும் இவள் அவன் மனைவிபோல நடித்துப் பழிவாங்கத் தலைப்பட்டபோது அவன் அஞ்சியோடி அவ்வூர் வேளாளர் எழுபது நபர்களிடம் அடைக் கலம் புகுந்தான். அவர்கள் பிணைகொடுத்தனர். இருந்தும் இவள் செட்டியை வஞ்சித்துக் கொன்றாள். பிணைகொடுத்த வண்ணம் எழுபதுநபர்களும் தீப்புகுந்து உயிர்துறந்தனர். இதனை,

''முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் மடிகளே''

என ஞானசம்பந்தர் வாக்கால் அறியலாம். சொன்ன சொல்லுக் காகத் தங்களையே அழித்துக்கொள்ளும்போது சான்றோர்கள் நின்று ஏதும் கூறமுடியாமல் தவிக்கும் காட்சியும், சொன்ன சொல்லை நிறைவேற்ற வேண்டும் என்ற உறுதிப்பாடும் மேலே சொன்ன ஈங்கோய் எழுபதின் பாடல் சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டி இருக்கின்றது. சமூகத்திற்கு யாரால் தீங்கு வந்தாலும், அதைத் தனி மனிதனாக நின்றோ கூட்டமாக நின்றோ எதற்கும் அஞ்சாமல் எதிர்த்துக் கேட்கின்ற உரிமையும் கடப்பாடும் நமக்கு உண்டு என்பதைச்சுட்டிக்காட்டி இருக்கிறார்கள். **—தொடரும்**

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA No 16/98
Licence No. 11, Licenced to Post Without Pre Payment
Date of Posting at Madurai Bazaar Post Office 16-2-98

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'
உழவாரம்
ஆசிரியர் : சுடலைக்கந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு,
டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம்,
B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்

திரு N. திருநாவுக்கரசு
7/2 சர்ச் 4வது தெரு
T.T. நகர்
அப்பர் அருளகம்
சொரைக்குடி
630 002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-